Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

நம்பிக்கை

நமது மன உறுதியும் பலமும் மனித குலத்தின் நம்பிக்கைக்கு உயிர் நாடியாக இருக்க முடியும்.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

ஜனநாயக வாழ்வு

ஜனநாயக வாழ்வு என்பது பண்பட்ட மக்களிடையே இருக்க வேண்டியதாகும்.

-தந்தை பெரியார்

மலர்: 7 சென்னை -6-83 புதன் வெளியூர் 16-6-83 வியாழன் இதழ்: 236

## புதுவை தி.மு.க. கூட்டணி அரசு மீது

# ஏராளமான ஊழல் புகார்

### கவர்னர் சாண்டி ஒப்புதல்- அதிகாரிகளுக்கு முக்கிய உத்தரவு

**பாண்டிச்சேரி, ஜூன் 15. புதுவை தி.மு.க. ஆட்சி பற்றிய ஊழல் புகார்கள் ஏராளமாக வந்துள்ளதாக, கவர்னர் சாண்டி தெரிவித்துள்ளார்.**

**எத்தகைய நிர்பந்தத்திற்கும் அடிபணியாமல் பணியாற்றுமாறு அதிகாரிகளை தாம் கேட்டுக் கொண்டுள்ளதாகவும் கவர்னர் சாண்டி அறிவித்துள்ளார்.**

புதுவை தி.மு.க. ஆட்சியில் லஞ்ச ஊழல் மலிந்து அரசு நிர்வாகப் பணிகள் தேங்கிகிடப்பது தெரிந்ததே.

மத்திய அரசின் உதவியோடு நடைபெறும், ஊரக வளர்ச்சித் திட்டம் மற்றும், மாவட்ட வளர்ச்சி திட்டங்கள் உட்பட பல்வேறு துறைகளில் பெரும் ஊழலும் முறைகேடும் நடந்திருப்பதாக புதுவை மாநில அ.தி.மு.க. செயலாளர் பி. கே. லோகநாதன் மனு கொடுத்திருந்தார்.

புதுவைமாநில இந்திரா காங்கிரஸ் கட்சித்தலைவர் பி. சண்முகம் எம். பி. உட்பட மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர்களும் புதுவை தி. மு. க. மந்திரிகளிடையே உள்ள லஞ்ச ஊழல் காக்களில் லஞ்சமும் ஊழலும் பெருகிவிட்டதாக குற்றம் சாட்டியுள்ளனர்.

தி.மு.க. ஆட்சி மீது இந்திரா காங்கிரசார் பகிரங்கமாக புகார்கள் கூறத்தொடங்கியதை அடுத்து திமுக மந்திரி சிவகுமார் இனி புதுவையில் திமுக தனித்துப் போட்டியிடும் என பொதுக்கூட்டம் ஒன்றில் அறிவித்தார்.

இதற்குப் பதிலளித்த பி. சண்முகம் எம். பி. இந்திரா காங்கிரசும், தனித்து போட்டியிட தயாராகவே உள்ளதாக அறிவித்தார்.

திமுகவும், இ காங்கிரசும் பகிரங்கமாக மோதிக் கொண்டதை அடுத்து இரு கட்சிகளுக்கும் இடையேயான கூட்டணி முறியும் நிலையில் உள்ளதாக கூறப்படுகிறது.

### கவர்னர் அறிவிப்பு

இதற்கிடையில்புதுவை மாநில கவர்னர் கே.எம். சாண்டி நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

புதுவை மாநிலத்தில், மத்திய அரசின் உதவியோடு நடைபெறும், திட்டங்களில் முறைகேடுகள் நடந்துள்ளதாக என்னிடம் புகார்கள் தரப்பட்டுள்ளன.

வறுமைக்கோட்டிற்குக் கீழே வாடும் ஏழை எளிய மக்களின் நன்மைக்காக போடப்படும் திட்டங்களின் பலன் கிடைக்கச் செய்ய வேண்டியது அவசியமாகும்.

இத்தகைய திட்டங்களை நிறைவேற்றும் பணியில் ஈடுபடும் அதிகாரிகள் எந்த வகையில் எத்தகைய நிர்ப்பந்தம் கொடுத்தாலும அதைப் பற்றி கவலைப்படாமல் நேர்மையாக செயல்படுமாறு சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டுள்ளேன்,

இவ்வாறு கவர்னர் சாண்டி கூறினார்.

### அவசர சந்திப்பு

முன்னதாக புதுவை முதல்வர் டி.ராமச்சந்திரன் கவர்னர் சாண்டியை சந்தித்துப்பேசினார்.

புதுவை மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் பி. சண்முகமும், இந்திரா காங்கிரஸ் மந்திரி எஸ். சவுரிராஜனும், நேற்று சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றனர். இந்திரா காங்கிரசைச் சேர்ந்த மற்றொரு மந்திரியான ரேணுகா அப்பாதுரை ஏற்கனவே சென்னையில் உள்ளார்.

இதற்கிடையில், அடுத்த மாதம் நடைபெற உள்ள மாநிலங்களவை உறுப்பினருக்கான தேர்தலில் தி.மு.க நிச்சயமாக போட்டியிடும் என சட்டசபை திமுக கட்சித் தலைவர் பி சுப்பராயன அறிவித்துள்ளார்.

இந்தத் தேர்தலுக்கு முன்னதாகவே திமுக இந்திரா காங்கிரஸ் கூட்டணி முறிந்து விடும் எனக் கூறப்படுகிறது.

## சத்துணவுதிட்டத்துக்கு அமெரிக்க டாக்டர் நன்கொடை - பாராட்டு

சென்னை, ஜூன் 15— அமெரிக்க நாட்டு அறுவை சிகிச்சை நிபுணர்கள் குழு உறுப்பினரும் பிரபல டாக்டருமான குருசாமி தமிழகம் வந்துள்ளார்.

தமிழகத்தில் செயல்படும் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தை டாக்டர் குருசாமி நேரில் கண்டு, பாராட்டி உள்ளார்.

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்காக டாக்டர் குருசாமி முதல் தவணையாக 1500 டாலர்கள் நன்கொடையாக முதல்வர் புரட்சித் தலைவரிடம் அளித்தார்.

அமெரிக்கா சென்று மேலும் நன்கொடை திரட்டி அனுப்புவதாகவும் டாக்டர் குருசாமி தெரிவித்தார்

## பாரி சர்க்கரை ஆலை மூடலா?

# 3000 பேர் வேலை இழப்பை தவிர்க்க அரசு தீவிர நடவடிக்கை

சென்னை. ஜூன் 15— 3 ஆயிரம் பேர் வேலை செய்யும் பாரி கம்பெனியின் சர்க்கரை ஆலையை மூடவிடாமல் தடுப்பதற்கான நடவடிக்கைகளை தமிழக அரசு எடுத்துள்ளது.

தென்னாற்காடுமாவட்டம் நெல்லிக்குப்பத்தில் ஈ ஐ டி பாரி சர்க்கரை ஆலைகடந்த 135 ஆண்டுகளாக இயங்கி வருகிறது இதில் 3 ஆயிரம தொழிலாளர்கள் வேலை பார்த்து வருகிறார்கள். தொழிற்சாலையை மூடிவிட அதன் நிர்வாகம முடிவு செய்துள்ளது. வரும ஆகஸ்டு மாதம் 8ம் தேதி முதல் தொழிற்சாலையை மூடப்போவதாக தமிழக அரசு தொழிலாளர்நல இலாகாவுக்கு நிர்வாகம் முன் அறிவிப்பு கொடுத்துள்ளது.

கடந்த 4 ஆண்டுகளில் மட்டும் ரூ. 15 கோடி நஷ்டம் ஏற்பட்டுள்ளதாகவும், தேவைக்கு அதிகமாக உள்ள தொழிலாளர்களை ஆட்குறைப்புச் செய்ய தொழிற்சங்கம் மறுப்பதாலும், நிர்வாக செலவை சரிக்கட்ட முடியாத நிலையில் ஆலையை மூடிவிடுவது என்று நிர்வாகம் தீர்மானித்து உள்ளதாக அந்த முன் அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது

ஆலையை மூடவிடாமல் தடுக்க தமிழக அரசு நடவடிக்கை எடுத்துள்ளது. இதற்காக சென்னையில் முத்தரப்பு மாநாடு கூட்டப்படுகிறது

நாளைவியாழக்கிழமை இந்தக் கூட்டம் நடக்கிறது. இதற்கான ஏறபாட்டை தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் செய்துள்ளார்.

சர்க்கரை ஆலையுடன் இணைந்து செயல்படும் சாராயவடி தொழிற்சாலை, கரியமில வாயு தயாரிப்பு தொழிற்சாலை ஆகிய 3 தொழிற்சாலைகளும் மூடப்படாமல் இருக்க இந்த நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டிருக்கிறது.

ஒரே பிரசவத்தில்

## 7 குழந்தை பெற்று சாதனை படைத்த பெண்மணி

பூலந்த்ஷர் (உபி) ஜூன் 15—உத்தரப்பிரதேசத்தில் ஒரு கிராமப் பெண் ஒரே பிரசவத்தில் ஏழு குழந்தைகள் பெற்று சாதனை புரிந்துள்ளார்

பிறந்த 7 குழந்தைகளில் 6 அப்போதே இறந்தபரிதாபமும் ஏற்பட்டது.

பூலந்த்ஷர் மாவட்டம் அருமத்பூர் கிராமத்தில் இந்த அதிசயம் நிகழ்ந்தது.

அந்தக் கிராமத்துப் பெண்மணி கருவுற்று இருந்தாள். பேறுநேரம் வரவலி எடுத்தது.

அடுத்து அடுத்து ஆறு குழந்தைகள் பிறந்தன, இவை ஆறும் சில நிமிடங்களில் இறந்து விட்டனவாம்,

அடுத்து 7—வதாகப் பிறந்த குழந்தை மட்டும் உயிரோடு ஆரோக்கியமாக உள்ளது

அப்பாடா என்று மகிழ்ந்துள்ளார் அந்தப் பெண்மணி

ஏழு குழந்தை பெற்ற விவரம் அந்தப் பகுதியில் பரவ ஏராளமான மக்கள் வந்து தாயையும சேயையயும பார்த்தனர்.

### கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதாவுக்கு

# கொங்குநச் சீமை தந்த கோலாகல வரவேற்பு

### கடும் குளிரையும் பொருட்படுத்தாது அதிகாலையில் திரண்ட தாய்க்குலம்

**கோயமுத்தூர், ஜூன் 15. கழக அரசின் சாதனை விளக்க பொதுக் கூட்டத்தில் பங்கேற்க வந்த கொள்கை பரப்புச் செயலாளர் சிந்தனைச் செல்வி ஜெயலலிதாவுக்கு ரயில் நிலையத்தில் சீர்மிகு வரவேற்பளிக்கப்பட்டது.**

கடும் குளிரையும் பொருட்படுத்தாமல் ஆயிரத்துக்கும் மேற்பட்ட தாய்மார்கள் உட்பட பல்லாயிரக் கணக்கானவர்கள் திரண்டிருந்துவாழ்த்து முழக்கங்களோடு வரவேற்றனர். செல்வி ஜெயலலிதாவை யானை மாலையணிவித்து வரவேறறது.

கோவையில் இன்று நடைபெறும் கழக அரசின் சாதனை விளக்கப் பொதுக்கூட்டத்தில் பங்கேற்க நீலகிரி எக்ஸ்பிரஸ் ரயில் மூலம் செல்வி ஜெயலலிதா இன்று கோவை வந்தார்.

கோவையில் நேற்று பலத்த மழை பெய்திருந்தது. அதைத்தொடர்ந்து இன்று காலையில் கடும் குளிர் இருந்தது. அந்தக குளிரையும் பொருட்படுத்தாமல் ஆயிரத்துக்கும் மேற்பட்ட தாய்மார்கள் உள்பட பல்லாயிரக் கணக்கானவர்கள் ரயில் நிலையம் வந்து செல்வி ஜெயலலிதாவுக்கு வரவேற்பு அளித்தனர்.

செல்வி ஜெயலலிதா வந்த ரயில் இன்று அதிகாலை 5.45 மணிக்கு கோவை ரயில்நிலையத்தை அடைந்தது ஆனால் அதிகாலை 4 மணிக்கே ரயில்நிலையத்தில் கழகத்தினர் திரள ஆரம்பித்தனர்.

### தாரை தப்பட்டை முழங்க வரவேற்பு

ரயிலிலிருந்து செல்வி ஜெயலலிதா ... வாழ்த்து முழக்கங்கள் வானை எட்டின செல்வி ஜெயலலிதாவை நோக்கி பெண்கள் மலர்களைத் தூவி வரவேற்றனர். அப்போது தாரைதப்பட்டை முழங்கின மாவட்ட எம் ஜி ஆர் மன்றத்தின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அலங்கரிக்கப்பட்ட யானை செல்வி ஜெயலலிதாவுக்கு மாலை அணிவித்தது.

இரண்டு விரல்களைக் காட்டி மகிழ்ச்சி தெரிவித்த செல்வி ஜெயலலிதா ரயில் நிலையம் அருகே அமைக்கப்பட்டிருந்த மேடையில் ஏறி நின்று அனைவருக்கும மகிழ்ச்சி தெரிவித்து வரவேற்பை ஏற்றுக் கொண்டார்.

பின்னர் அங்கிருந்து தாம் தங்கும் இடத்துக்கு செல்வி ஜெயலலிதா சென்றார். வழிநெடுக சாலைகளின் இருமருங்கிலும் ஏராளமான மக்கள் நின்றிருந்து கையசைத்தும், மகிழ்ச்சி ஆரவாரம் செய்தும் செல்வி ஜெயலலிதாவை வரவேற்றனர்.

சிந்தனைச்செல்வி ஜெயலலிதாவின் வருகையையொட்டி கோவை நகரமே விழாக்கோலம்பூண்டிருந்தது.

கழக அரசின் சாதனைகளை விளக்கும் வரவேற்பு வளைவுகள் அமைக்கப்பட்டிருந்ததோடு, ஆங்காங்கே தட்டிகளும் எழுதி வைக்கப்பட்டிருந்தன. வீதிகள் தோறும் கழகக் கொடிகளாலான தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன.

தஞ்சை பெரிய கோயில், மாதா கோயில், மசூதி ஆகிய ஆலய வடிவங்கள் அமைக்கப்பட்டு மின்விளக்கு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது 80 அடி உயரத்தில் பாரிஸ் கோபுரவடிவம் அவினாசி மேம்பாலம் அருகேபிரம்மாண்டமாக அமைக்கப்பட்டு மின் விளக்கு அலங்காரத்துடன் கம்பீரமாகக் காட்சியளித்தது

கோவை ரயில் நிலைய வரலாற்றில் புதிய அத்தியாயம் படைக்கும் வகையில் இன்று செல்வி ஜெயலலிதாவுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு இருந்தது. செல்வி ஜெயலலிதாவை வரவேற்க முஸ்லிம சகோதரிகள் பெருமளவில் வந்திருந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

ஆர். கிருஷ்ணன் எம பி, கழக சட்டமன்ற உறுப்பினர்கள் கோவைத் தம்பி, திருப்பூர் மணிமாறன், கே வி கந்தசாமி பொள்ளாச்சி ரத்தினம், பரமசிவம் சின்னராசு, மற்றும் கா மருதாசலம், நா, கருப்புசாமி, பேரூர் சண்முகசுந்தரம் ஜாராஜ், ஜக்கரியா, சையதமுகமது சுதாதேவி எம். எல். சி. கோவைத்தம்பி, முத்தம்மாள் கருணையம்மாள், சுந்தரி கோபாலன் பாத்திமா பீவி ஆகியோர் உட்பட ஆயிரக் கணக்கானவர்கள் ரயில் நிலையத்திற்கு வந்திருந்தனர்.

சென்னை மாவட்ட

# எம். ஜி. ஆர். மன்றம் நடத்தும் கேரளசுந்தரம் நிகழ்ச்சிகள்

சென்னை, ஜூன் 15— சென்னை மாவட்டம் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்கள் சார்பில் நடைபெறும் கழக தொடர் கூட்டங்களில் கேரள சுந்தரம் கலந்து கொள்கிறார் நிகழ்ச்சி விவரம் வருமாறு

ஜூன் 20—82 வது வட்டம் [அண்ணா நகர்]
21—14 வது வட்டம [ராயபுரம்]
22—33 வது வட்டம் [தருமங்கலம்]
23—110 வது வட்டம் [தி. நகர்]
24—ராயபுரம் 9 வது வட்டம்.
25—147 வது வட்டம்
26—141 வது வட்டம்,
27—56 வது வட்டம்.
28—113 வது வட்டம்.
29—142 வது வட்டம்,
30—145 வது வட்டம்.

மேற்கண்ட தகவலை சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் இ. மதுசூதனன் அறிவித்துள்ளார்.

# பெங்களூர் அருகே பஸ்-ரெயில் மோதல்:

பெங்களூர் ஜூன் 15. ஆள் இல்லாத ரெயில்வே லெவல் கிராசிங்கை கடந்து சென்ற ரெயில் என்ஜின் மீது பஸ் ஒன்று மோதியதால் ஏற்பட்ட விபத்தில் 11 பேர் உயிரிழந்தனர். 19 பேர் படுகாயம் அடைந்தனர். அவர்கள் அனைவரும் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

பெங்களூர் அருகே சன்னபா கிராமத்தில் இந்த விபத்து நடந்தது.

விபத்துக்குள்ளான பெங்களூர் போக்குவரத்துக் கழக பஸ்ஸின் பின்பகுதி சின்னாபின்னமாகி சிதறுண்டு உடைந்தது. பஸ் டிரைவரும் படுகாயமடைந்தார்.

தகவல் அறிந்ததும் ரயில்வே துணை அமைச்சர் ஜாபர் ஷெரீப் விபத்து நடந்த இடத்துக்கு விரைந்து சென்றார். அவர் சென்ற காரை பொதுமக்கள் சிலர் சூழ்ந்து கொண்டு கற்களை வீசினார்கள் அதனால் காரின் முன்பாகம் சற்று சேதமுற்றது

விபத்து நடந்த ரெயில்வே கேட்டுக்கு காவலரை நியமித்து கேட்டை பொருத்த வேண்டும் என்று பலமுறை கோரிக்கைகளை பொதுமக்கள் அனுப்பியதாகவும் ஆனால் ரெயில்வே துறை அதற்கு எந்த விதமான நடவடிக்கையும் மேற்கொள்ளவில்லை என்று கூறப்படுகிறது

கூட்டத்தினரைக் கலைக்க போலீசார் கண்ணீர்புகை குண்டுகளை வெடித்தனர்.

திருவாரூர் தெனம்கலவன் மகள் ... மேகலைக்கும் கார்த்திகேயனுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் திருமணம் நடந்தது

# அரசு மீது அவதூறு கூறிய கருணாநிதி மீது வழக்கு

சென்னை ஜூன் 15. சிமெண்ட் இறக்குமதி செய்ததில் ரூ 80 லட்சம் கமிஷன் பெற்றதாக திமுக தலைவர் கருணாநிதி கூறிய அவதூறை எதிர்த்து அரசு சார்பில் வழக்கு தொடரப்பட்டுள்ளது.

ஜூலை 2ம்தேதி நீதிமன்றத்தில் ஆஜராகுமாறு கருணாநிதிக்கு சம்மன் பிறப்பிக்கப்பட்டுள்ளது.

கருணாநிதி கூறிய அவதூறு பற்றிய விவரம் வருமாறு?—

கடந்த ஆண்டு டிசம்பர் மாதத்தில் வடபழனிக் கூட்டத்தில் தி. மு. க. தலைவர் கருணாநிதி பேசினார். 40 லட்சம் சிமெண்ட் மூட்டைகளை இறக்குமதி செய்ததில் ரூ. 80 லட்சம் கமிஷன் பேசி வாங்கியதாக கருணாநிதி ஒரு அவதூறை அந்தக்கூட்டத்தில் கூறினார்.

கருணாநிதி கூறிய இந்த அவதூறு குற்றச்சாட்டு குறித்து தமிழக அரசு இப்போது வழக்குத் தொடர்ந்துள்ளது.

சென்னை முதன்மை செஷன்ஸ் நீதிபதி முன்பு இந்த வழக்கு தாக்கல் செய்யப்பட்டு இருக்கிறது.

## கருணாநிதிக்கு சம்மன

இந்திய குற்றவியல் சட்டம் 500வது பிரிவின் கீழ் தண்டனைக்குரிய குற்றமான அவதூறை ஏற்படுத்தும் தன்மையில் கருணாநிதி பேசி இருக்கிறார்.

இது குறித்து பதில் கூற ஜூலை 2ம் தேதி காலை 11 மணிக்கு நீதிபதி முன்னிலையில் ஆஜராக வேண்டும், என்று கருணாநிதிக்கு சம்மன் அனுப்பப்பட்டு இருக்கிறது.

# தமிழ்நாட்டில் வீடு வீடாகச் சென்று சிகிச்சை: தொழு நோயை ஒழிக்க தீவிரம்

சென்னை, ஜூன் 15. வீடு வீடாகச் சென்று சிகிச்சை அளித்து தொழு நோயை அறவே ஒழிக்கும் தீவிர திட்டம் ஒன்று வட ஆற்காடு மாவட்டத்தில் செயல்படுத்தப்பட விருக்கிறது.

வட ஆற்காடு மாவட்டத்தில் சுமார் 77 ஆயிரம்பேர் தொழு நோயால் பாதிக்கப்பட்டிருப்பதாக கணக்கெடுக்கப்பட்டுள்ளது 6 மாத காலத்துக்குள் மாவட்டம் பூராவும் உள்ள எல்லா நோயாளிகளுக்கும் மருந்துகள் கொடுத்து சிகிச்சை அளிக்க திட்டமிடப்பட்டுள்ளது. கட்டம் கட்டமாக சிகிச்சை அளிக்கப்படும்.

தமிழக அரசு சுகாதாரத்துறை துணை இயக்குனர் டாக்டர் சி எஸ் கங்காதர் சர்மா இத்தகவலைத் தெரிவித்துள்ளார்

# இளம்பெண் திடீர் மரணம

சென்னை, ஜூன் 15. சென்னை ராயப்பேட்டை மருத்துவமனை அவசர சிகிச்சைப் பிரிவு முன்பு 20 வயது மதிக்கத்தக்க பெண் திடீரென மயங்கி விழுந்து மரணமடைந்தார்.

இவர் யார் என்ற விவரம் தெரியவில்லை ராயப்பேட்டை போலீசார் இது குறித்து விசாரித்து வருகிறார்கள்

மதுபான விற்பனை

# அரசு உத்தரவு

சென்னை ஜூன் 15.

தமிழக அரசு மதுபான மொத்த வியாபாரத்தை விநியோகிக்க தமிழ்நாடு மாநில விற்பனைக்கழகம என்ற அமைப்பை துவக்கி இருப்பது தெரிந்ததே.

கடந்த முதல் தேதியில் ஏற்கனவே மொத்த மதுபான விற்பனை வைத்திருந்தவர்களிடம் இருந்த கையிருப்பு முழுவதையும் இந்த விற்பனைக் கழகம் எடுத்துக்கொண்டு இருக்கிறது.

அப்படி எடுத்துக் கொள்ளும் மதுபானங்களுக்கு பணம் தருவதற்காக தமிழக அரசின் அவசர நிதியில் இருந்து கூடுதலாக ரூ 5 கோடி எடுத்துக் கொள்வதற்கு தமிழக ஆளுநர் அனுமதி அளித்திருக்கிறார்.

இவ்வாறு அரசு உத்தரவு ஒன்றில் கூறப்பட்டிருக்கிறது.



# வருமானவரி அதிகாரி போல நடித்த பலே கில்லாடி கைது

சென்னை ஜூன் 15. வருமானவரி அதிகாரி போல் நடித்து மோசடி செய்ய முயன்ற வாலிபர் ஒருவரை மத்திய குற்றப்பிரிவு போலீசார் கைது செய்துள்ளனர் அவர் கொடுத்த தகவலின் பேரில் மேலும் 3 நபர்களைப போலீசார் கைது செய்தனர்.

சென்னை பூக்கடையை அடுத்த கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் "துரைராஜ் செட்டி டிஸ்டு" என்ற ஒரு நிறுவனம் உள்ளது. அந்த நிறுவனத்தில்சலவைக்குத் தேவையான பல பொருள்கள் விற்பனை செய்யப்பட்டு வந்தன. கடந்த சனிக்கிழமை அந்த நிறுவனத்தின உரிமையாளர் நந்தகுமாருக்கு ஒரு டெலிபோன் வந்தது டெலிபோனில் மறுமுனையில் பேசியவர் தான் ஒரு வருமான வரி அதிகாரி என்று அறிமுகம் செய்து கொண்டார்.

பின்னர் உங்கள் நிறுவனத்தின்மீது பல புகார்கள வந்துள்ளன. இது குறித்து தான விசாரணை நடத்த இன்று மாலை 5 மணிக்கு வருவதாக தெரிவித்தார்

## டிப்டாப் ஆசாமி

அதன்படி அன்று மாலை 5 மணிக்கு ஒரு டிப்டாப் ஆசாமி ஒரு மோட்டார் சைக்கிளில் அங்கு வந்தார், பிறகு அந்த நிறுவனத்திற்குச் சென்று நந்தகுமார் யார் என்று விசாரித்தார்.

பின்னர் நந்தகுமாரிடம் சில புகார் மனுக்களைக் காட்டி உங்கள் மீது பல புகார்கள் வந்துள்ளன. அதுவும்நீங்கள் தங்கம், வெள்ளிகளை மறைத்து வைத்திருக்கிறீர்கள். எனவே உங்கள மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப் போகிறேன் என்று மிரட்டினார்.

ஆனால் நந்தகுமாருக்கு அந்த நபர் மீது சந்தேகம் ஏற்பட்டது. உடனே அவர் அந்த நபரிடம் நைசாக பேரம்பேசினார் வரும் பணம் கொடுத்துவிடுகிறேன் என்னை விட்டு விடுங்கள் என்று கெஞ்சினார்.

உடனே அந்த நபர் 5 ஆயிரம் பணம் கொடுத்தால் விட்டு விடுவதாக தெரிவித்தார்

நந்தகுமாருக்கு மேலும் சந்தேகம் ஏற்பட்டது. உடனே நந்தகுமார் தனது நண்பர்களுக்கு போன செய்து உடனடியாக 5000 ரூபாய் எடுத்து வருமாறு கூறினார்.

பின்னர் அந்த நபருக்கு குளிர்பானங்கள் வாங்கிக் கொடுத்துபக்கத்திலுள்ள தனது நண்பர் கடைக்கு சென்று கொஞ்சம் பணம் வாங்கி வருவதாக கூறி வெளியே சென்று அங்கிருந்து போலீசுக்கு போன் மூலம் தகவல் கொடுத்தார்.

உடனே போலீசார் அந்த இடத்திற்கு விரைந்து சென்று அந்த ஆசாமியை விசாரித்தனர்.

## மேலும் மூவர் கைது

விசாரணையில் அவர் பெயர் சுப்பையா என்றும் ஒரு தனியார் சீட்டு கம்பெனியில வேலை செய்து வந்ததாகவும தெரிய வந்தது.

இதுகுறித்து போலீசார் சுப்பையாவை கைது செய்து அவர் வந்திருந்த மோட்டார் சைக்கிளை யும் பறிமுதல் செய்தனர். பின்னர் அவர் கொடுத்த தகவலின் பேரில் மேலும் 3 நபர்களையும் போலீசார் கைது செய்தனர்.

விசாரணையில் இவர் இம்மாதிரி பலபேரிடம் மோசடி செய்ததாக தெரியவந்துள்ளது.

# காஷ்மீரில் பயங்கர கலவரம்: போலீசார் துப்பாக்கிச் சூடு

700பேர் காயம்: ஊரடங்கு அமல்

ஸ்ரீநகர் ஜூன் 15. காஷ்மீரில் தேசிய மாநாட்டு கட்சியினரும் இந்திரா காங்கிரஸ்காரர்களும் பயங்கரமாக மோதிக்கொண்டனர். கலவரத்தை அடக்க போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினா; இதில் 700 பேர் படுகாயம் அடைந்தனர். கலவரப்பகுதிகளில் ஊரடங்கு அமுலாக்கப்பட்டது

கடந்த 5ம் தேதி காஷ்மீரில்சட்டசபை பொதுத்தேர்தல் நடந்து முடிந்தது தெரிந்ததே தேசிய மாநாட்டு கட்சியினர் இந்திரா காங்கிரஸ்காரர்கள் ஆங்காங்கே வெற்றி ஊர்வலம் நடத்துகிறார்கள்.

இந்திரா காங்கிரஸ்காரர்கள் அதிகம் உள்ள பகுதியில் நேற்று தேசிய மாநாடு கட்சியினர் ஊர்வலம் நடத்த முற்பட்டபோது பலத்த எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது இதைத்தொடர்ந்து இரு தரப்பினரும் பயங்கரமாக மோதிக்கொண்டனர் கடைகள் சூறையாடப்பட்டன. கத்தி, ஈம்பு கல்வீச்சு, திராவகப் புட்டிகள் ஆகியவற்றால் ஒருவரைஒருவர் தாக்கிக் கொண்டனர். சில இடங்களில் வீடுகளுக்கும் தீ வைக்கப்பட்டது.

## துப்பாக்கிச் சூடு

கலவரத்தை அடக்க போலீசார் 5 முறை துப்பாக்கிச் சூடு நடத்தினர் நூற்றுக்கணக்கான கண்ணீர்புகை குண்டுகளையும் வெடித்தனா.

## ஊரடங்கு உத்தரவு அமல்

துப்பாக்கிச் சூட்டில் சுமார் 700 பேர் காயம் அடைந்தனர். அதில் 100 பேர் படுகாயம் அடைந்தனர், காயம் அடைந்த அனைவரும் மருத்துவ மனைகளில் சேர்க்கப்பட்டனா.

கலவரப் பகுதிகளான ஸாடிபால், ஹவால், நபித பாரா. அலம் கிரிபஜார் முதலிய இடங்களில் ஊரடங்கு சட்டம் அமுலாக்கப்பட்டுள்ளது கண்டவுடன் சுட்டு வீழ்த்தவும் உத்தரவிடப்பட்டுள்ளது.

கலவரத்தை அடக்குவதில் போலீசார் தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறார்கள் முதலமைச்சர் பரூக் அப்துல்லா வேபாதிக்கப்பட்டுள்ள இடங்களுக்கு சென்று பந்தோபஸ்து நடவடிக்கைகளை நேரடியாக கண்காணித்து வருகிறார்

# இலங்கையில் எல்லா அமைச்சகத்திற்கும் விசேஷ தமிழ்ப் பிரிவு

ஜனாதிபதி ஜெயவர்த்தனா உத்தரவு

கொழும்பு ஜூன் 15. இலங்கையில் ஒவ்வொரு அமைச்சகத்திலும் விசேஷ தமிழ்ப் பிரிவு ஒன்றை ஏற்படுத்தவேண்டும் என்று ஜனாதிபதி ஜெயவர்த்தனா உத்தரவிட்டுள்ளார்.

இலங்கை நாட்டு உள்துறை அமைச்சர் தேவநாயகம் நேற்று கொழும்பில் நிருபர்கள் கூட்டம் ஒன்றில் பேசினார் அப்போது அவர் கூறியதாவது!

தமிழ் மொழியை பயன்படுத்துவது பற்றி விசேஷ சட்டம் இதுவரையில் செயல்படுத்தாமல் இருப்பதற்கு பெரும் பான்மை அமைச்சர்கள் எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார்கள்.

இலங்கை வாழ் தமிழ மக்களும் இது குறித்து திருப்தியற்ற நிலையில் உள்ளனர் இந்தநிலைமையை சரிப்படுத்தும வகையில் ஒவ்வொரு அமைச்சகத்திலும் விசேஷ சிறப்புத் தமிழ் பிரிவு ஒன்றை ஏற்படுத்த ஜனாதிபதி ஜெயவர்த்தனா உத்தரவு பிறப்பித்துள்ளார்.

தமிழர்களுக்கு சிங்கள மொழியில் அனுப்பப்படும் எல்லா கடிதப்போக்குவரத்துக்களும் தமிழ் மொழி பெயர்ப்புடன் அனுப்பப்பட வேண்டும என்றும் ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்த ஏற்பாடுகளுக்கு இலங்கை மந்திரி சபையும் ஒப்புதல் அளித்துள்ளது.

எனக்கு வரும் சில கடிதங்கள் கூட சிங்கள மொழியில் இருப்பதால் நான் மிகவும் சிரமப்படுகிறேன் அதை தமிழ்படுத்தி படிப்பதற்கு மற்றவர்களைபே போய் நான் தேட வேண்டியுள்ளது

இவ்வாறு அமைச்சர் தேவநாயகம் கூறினார்.

# கார் மோதி மோட்டார்-சைக்கிளில் வந்த போலீஸ்காரர் மரணம்

சென்னை, ஜூன் 15— ராயப்பேட்டை போலீஸ் நிலையத்தில் குற்றப்பிரிவு போலீஸ்காரராக பணியாற்றியவர் ராகவன் இவரும் போக்குவரத்து போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் ருத்ரசேகரனும் நேற்று காமராஜர் சாலையில் மோட்டார் சைக்கிளில் சென்றனர்.

கண்ணகி சிலை அருகே அவர்கள் வரும் போது எதிரே வந்த ஒரு கார் அவர்கள் மீது மோதியது இருவரும் தூக்கி எறியப்பட்டு படுகாயமடைந்த நிலையில் அரசினர் பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டனர்.

நேற்று இரவு ராகவன் இறந்து விட்டார். ருத்ரசேகரன் தொடர்ந்து சிகிச்சை பெற்று வருகிறார். மறைந்த ராகவனுக்கு அண்மையில் தான் திருமணமாயிற்று. மனைவியும் ஒரு குழந்தையும் உள்ளனர்.

# வலம்புரி ஜான் ரஷ்யா பயணம்

சென்னை, ஜூன் 15— சோவியத் அரசின் பிரதான செய்தி நிறுவனமான நோவஸ்தேயின் சிறப்பு அழைப்பினை ஏற்று வலம்புரிஜான், எம். எல். சி., சோவியத் நாட்டில்பல்வேறுநிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள இம்மாதம் 16-ம் தேதி வியாழன் அன்று இரவு சென்னையிலிருந்து விமானம்மூலம் டெல்லி புறப்படுகிறார். 18ம் தேதி காலை டெல்லியிலிருந்து தாஷ்கண்ட் போய்ச் சேருகிறார்.

அவர் தமது சுற்றுப் பயணத்தின் போது உஸ்பெகிஸ்தான், துர்க்மெனிஸ்தான் சோவியத் குடியரசு லெனின்கிராடு, மாஸ்கோ ஆகிய பகுதிகளுக்குச் செல்கிறார்.

தமது இரண்டு வாரத்திய சுற்றுப் பயணத்தில், "சோவியத நாட்டின தேசிய இனங்கள் எவ்வாறு ஒற்றுமைபடுத்தப்பட்டுள்ளன, கூட்டுப் பண்ணை முறை எவ்வாறு வெற்றி பெற்றுள்ளது, இளைஞர்களின பிரச்சினை, முதியோர்களுக்கான சமூக பாதுகாப்பு, குழந்தை வளர்ப்பு, மத சுதந்திரம், மொழிப் பிரச்சினை" ஆகியவைகளைப் பற்றி அறிகிறார். பிரபல முன்னணி எழுத்தாளர், பத்திரிகையாளர்கள் ஆகியோரை சந்திக்க இருக்கிறார், இந்த சுற்றுப்பயணத்தின் போது சோவியத நாட்டில் வசிக்கும் இந்தியர்கள் வாழும் பகுதிகளுக்கும செலவார்.

பஞ்சாபில் ரெயில் நிறுத்தப் போராட்டம்:

# தடுத்து நிறுத்த கடும் நடவடிக்கை: மத்திய போலீஸ் குவிப்பு

புதுடெல்லி ஜூன் 15. பஞ்சாபில் அகாலிதள சீக்கியர்கள் நடத்தவிருக்கும ரெயில் நிறுத்தபபோராட்டத்தை முறியடிக்க மத்திய அரசும் மாநில அரசும் கூட்டாக கடும நடவடிக்கை மேற்கொண்டிருக்கிறது 35 பட்டாலியனுக்கும மேறபட்ட மத்திய ரிசர்வ் போலீசார மாநிலம் எங்கும் குவிக்கப் பட்டுள்ளனர.

மாநில சுயாட்சி சண்டிகார் நகரை பஞ்சாபுக்கு சொந்தமாக்குவது போன்ற பல்வேறு கோரிக்கைகளை வலியுறுத்தி பஞ்சாப் மாநில அகாலிதள சீக்கியர்கள் போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

இம்மாதம் 17ம் தேதி அன்று பஞ்சாப் மாநிலத்தில் ஓடும எல்லா ரயில்களையும் நிறுத்தி போராட்டம் நடத்துவது என்று அகாலிகள் அறிவித்திருக்கிறார்கள் இந்தப் போராட்டத்தில் எதற்கும் தயாராக இருக்கும் தற்கொலைப் படையினரையும் ஈடுபடுத்த அகாலிகள் திட்டமிட்டுள்ளனர்.

## கடும் நடவடிக்கை

அகாலிகளின் ரெயில் நிறுத்த போராட்டத்தை முறியடிப்பதில் மத்திய அரசும் மாநில அரசும் ஒருங்கிணைந்து கடும் நடவடிக்கை எடுக்கவிருக்கிறது. அகாலிகளின் சலசலப்புக்கு அஞ்ச வேண்டாம் என்றும், மாநிலத்தில் சட்டம் ஒழுங்கு ஆகியவற்றிற்கு எந்த முறையிலும் குந்தகம் ஏற்படாவண்ணம வன்முறையாளர் மீது கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும்என்றும் மத்திய அரசு மாநில அரசைக் கேட்டுக்கொண்டிருக்கிறது.

ஏற்கனவே 20 பட்டாலியன் மத்திய ரிசர்வ் போலீசார் பஞ்சாப் மாநிலத்தில் குவிக்கப்பட்டுள்ளனர். சட்டம், ஒழுங்கை நிலை நிறுத்துவதில் அவர்கள் ஈடுபட்டுள்ளனர் இப்போது மேலும் 15 பட்டாலியன மத்திய ரிசர்வ் போலீசார் அனுப்பப்பட்டுள்ளனர்.

ஆக மொத்தம் 35 பட்டாலியன் மத்திய போலீசார் பஞ்சாபில் அகாலிதள சீக்கியர்களின் ஆர்ப்பாட்டங்களை முறியடிப்பார்கள் என்று தெரிகிறது. தவிர மாநிலப் போலீசாரும் தீவிர நடவடிக்கைஎடுத்துள்ளனர்.

பஞ்சாப் மாநில முதலமைச்சர் தர்பாராசிங் டெல்லி சென்று அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகளுடன் ஆலோசனைநடத்தினார் மத்திய உள்துறை அமைச்சர் பி. சி. சேத்தியையும சந்தித்துப் பேசினார் பஞ்சாப் மாநில அரசு தலைமை செயலாளர் வாசுதேவா போலீஸ் டைரக்டர் ஜெனரல் மற்றும் மாநில அரசு அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார். மத்திய அரசு விசேஷசெயலாளர் டி.பி நய்யாரும் பஞ்சாபுக்கு அனுப்பப்பட்டுள்ளார்.

ரெயில்வேதுறையினரும் தீவிர பந்தோபஸ்து நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர்.

வேலூரில் நடந்த கழகக்கூட்டத்தில் கழக கொள்கை பரப்பு செயலாளருக்கு வாழ்த்து மடல் அளிக்கப்பட்டது

செல்வி ஜெயலலிதா பெருமிதம்

# வறட்சியையும் எதிர்த்து சாதனைகள் புரியும் புரட்சித்தலைவர் அரசு

வேலூர், ஜூன் 15. இயற்கை பொய்த்ததால் ஏற்பட்ட கடும் வறட்சியையும் எதிர்த்து சமாளித்து பல சாதனைகளைப் புரட்சித்தலைவர் அரசு புரிந்து வருகிறது என்று சிந்தனைச் செல்வி ஜெயலலிதா கூறினார்.

வேலூரில் நடைபெற்ற பிரம்மாண்டமான கழகப் பொதுக்கூட்டத்தில் கொள்கைபரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா கூறியதாவது:—

அண்மையில் கருணாநிதி பிறந்தநாள் விழாவில் பேசியவர்களும அவரும தமிழகம் மூடநம்பிக்கைகளாகி வருகிறது என்று கூறியிருக்கிறார்கள்

மதம், கடவுள் நம்பிக்கை மூடநம்பிக்கை இவற்றை பற்றி பேசும்போது சிலஉண்மைகளை நான் குறிப்பிட்டே ஆகவேண்டும சில கருத்துக்களை தெளிவுபடுதத விரும்புகிறேன்.

புரட்சித்தலைவரைப் பார்த்து நீங்கள் பெரியார் பாதையில் செல்லுகிறீர்களா? பெரியவாள் பாதையில செல்லுகிறீர்களா என்று சர்க்கார் குமரி அனந்தன் ஒரு கேள்வி எழுப்பியிருக்கிறார.

## வாகனை பேசும குமரி அனந்தன்

நான கருணாநிதியையும பார்த்து, அப்படி வக்கணை பேசுகின்ற குமரி அனந்தனையும பார்த்து ஒரு கேள்விக்கணை தொடுக்கிறேன் முடிந்தால் பதில் கூறட்டும் பார்க்கலாம்

திருவாரூர் தேரை கருணாநிதி இழுத்தால் அது நாத்திகம் புரட்சித் தலைவர் இழுத்தால மட்டும் அது ஆத்திகமா? வறட்சி ஏற்பட்டு மழை பெய்யாததால கடும குடிநீர் தட்டுபாடு ஏறபட்ட போது ஜோதிடர்களிடம் ஆலோசனைக் கேட்டு பஞ்சாங்கம பார்த்து குறிப்பிட்ட கால நேரம் பார்த்து மயிலை கபாலீசுவரர் கோயில தெப்பக்குளத்தைக் கருணாநிதி தோண்டினால அது நாத்திகம். அதையே புரட்சித் தலைவர் செய்தால மட்டும அது ஆத்திகமா?

## கருணாநிதியின் நாத்திக வேடம்

வெளிநாடு செல்லுவதற்கு முன் கண்ஆபரேஷன் செய்து கொள்வதற்கு முன் திருக்குவளை அங்காளபரமேஸ்வரி அம்மன் கோவிலுக்குச் சென்று தேஙகாய் உடைத்து அபிஷேகம நடத்தி அம்மனுக்கு வெள்ளிக் கண் சாத்தினால் அது மூடநம்பிக்கை இல்லை. அது நாத்திகம், ஆனால புரட்சித்தலைவர் மூகாம்பிகை கோவிலுக்கு சென்றால மட்டும மூடநம்பிக்கையாம அது ஆத்திகமாம.

எல்லா மதங்களுக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டியது ஒரு அரசின் கடமை அதை புரட்சித் தலைவர் உணருகிறார் அந்த கடமையை புரட்சித்தலைவர் அரசு நிறைவேற்றியே தீரும்.

## கழகத்தின் கொள்கை

கோவிலுக்குச் செல்பவர்களை முட்டாள், மூடன் என்று சொல்ல மாட்டோம் கோவிலுக்கு போகாதவர்களைப் பார்த்து முட்டாள்மூடன் என்றும கூறமாட்டோம். இதுதான் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தின் கொள்கை.

எல்லா மதங்களையும் புரட்சித்தலைவர் மதிக்கிறார் சங்கராச்சாரியார் விழாவில்புரட்சிதலைவர் கலந்து கொண்டார் அதையும் விமர்சித்து பேசுகிறார்கள்

## பங்கேற்ற விழாக்கள்

ஆனால் புரட்சித் தலைவர் நபிகள்நாயகம் விழாவிலும கலந்து கொண்டாரே அதை ஏன விமர்சிக்கவில்லை

மறைந்த கவிஞர் கண்ணதாசன் எழுதிய கிறித்துவ மதம் பற்றிய நூலை வெளியிடும் விழாவிலும் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டார்.

## கருணாநிதியின் சாபம்

கடந்த 3 ஆண்டுகளில் கருணாநிதி எத்தனை போராட்டங்கள் நடதத முடியுமோ அத்தனையும் நடத்தி முடித்து விட்டார் தமிழகமக்கள்கவர்ச்சியில் மயங்கிக்கிடக்கிறார்கள் என்று மக்களை சபித்தும் பார்த்து விட்டார் தமிழனுக்கு தன் மானம் வளரவில்லையே என்று சாபம் கொடுத்தும் பார்த்து விட்டார் கருணாநிதி.

இத்தனைக்கும் மேலாக இயற்கையின சோதனை வந்தது பருவ மழைகள் பொய்த்துவிட்டன.

வரலாறுகாணாத வறட்சிக்கு மத்தியிலும் வேதனைக்கு மத்தியிலும் கொடுத்த வாக்குறுதிகளைச் செயல்படுதது வதில் புரட்சிததலைவர் அரசு நல்ல பல சாதனைகளைச் செய்திருக்கிறது.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்.

மேல் விஷாரம்

# கழகச் செயலாளரை வாகனத்தை ஏற்றி கொல்ல முயன்ற தி.மு.க

வேலூர் ஜூன் 15. மேல் விஷாரம் கழக செயலாளர் தேவராஜனை ஆற்காடு தி. மு க, அவைத்தலைவர் நடராஜனும் அவரது கூட்டாளிகளும் வாகனத்தை ஏற்றி கொல்ல முயன்றனர், உயிருக்கு ஆபத்தான நிலையில் கழகத்தோழர் தேவராஜன் மருததுவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

இதுபற்றி கூறப்படுவதாவது:—

ஆற்காடு நகர தி. மு. க. அவைத் தலைவர் நடராசன் என்பவர் சாராயக் கடை எடுத்து நடத்தி வருகிறாராம்

கடந்த 11-ந் தேதி. அன்று தி. மு. க. நடராசன் தனது வேனில் சாராயத்தை எடுத்து வந்த போது மேல் விஷாரம் கழகச் செயலாளர் தேவராஜ் மீது வேனை ஏற்றி கொலை செய்ய முயற்சி நடந்துள்ளது.

மேல விஷாரம் குளத்திற்கு அருகே தேவராஜன் சென்றுகொண்டிருந்தபோதுசாராயததை ஏற்றி வந்த வேனை அவர் மீது மோதி கீழே தள்ளினார்களாம. தி மு. க. நடராசனே முன்னின்று டிரைவரை விட்டு தேவராஜின மீது வண்டியை ஏற்றச் செய்தாராம்.

வண்டி ஏறியதால் தேவராஜின் மண்டையில பலதத காயமும கை எலும்புகளும மார்பு எலும்புகளும் நொறுங்கின.

உயிருக்கு ஆபத்தான நிலையில மயங்கிக் கிடந்த தேவராஜனை வேலூர் சி எம. சி மருத்துவமனையில சேர்த்தனர். அங்கு அவருக்கு தீவிர சிகிச்சை அளித்து வருகின்றனர்.

இந்தக் கொலை முயற்சி பற்றி போலீசில புகார் செய்யப்பட்டது. போலீசார் வேன் டிரைவரையும தி மு க நடராசன், அவர் மகன் ராஜா ஆகியோரை கைது செய்து வழக்கு பதிவு செய்துள்ளனர்.

## ரப்பர் தொழிற்சாலை அடிக்கல் நாட்டு விழா

நாகர்கோயில், ஜூன் 15—நாகர்கோயில் அருகே வெள்ளிமலை என்ற இடத்தில் புதிய கூட்டுறவு ரப்பர் தொழிற்சாலைக்கான அடிக்கல்லை அமைச்சர் கே. ஏ. கே. நாட்டினார.

தமிழகத்தில் கிடைக்கக்கூடிய ஆதார பொருட்களைக் கொண்டு புதியதொழிற் சாலைகள் தொடங்க அரசு நடவடிக்கை எடுத்து வருவதாக, அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

கத்திமுனையில்கொள்ளை

## கொலை செய்த ஆசாமிக்கு தடுப்பு காவல்

சென்னை ஜூன் 15—கத்திமுனையில்ஆளை கடத்தி கொலை செய்து பல கொள்ளைகளையும் அடித்த புண்ணியா என்கிற புண்ணிய நாதனை தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் ஓராண்டுசிறையில்வைக்க கமிஷனர் ஸ்ரீ பால் உததிர விட்டார்.

இந்த நபர் 1982-ல் ராஜு என்பவரை கடத்தச் சென்று கொன்றதாகக் கூறப்படுகிறது.

பிறகு ஒரு பெட்டிக் கடைக்காரரைத் தாக்கி வயிற்றில் குததயவராம். இந்த ஆசாமியை இன்ஸ்பெக்டா முத்து வேலு கைது செய்தார். இவர் மீது பல வழக்குகள் உள்ளன.

தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் ஓராண்டு சிறையில் அடைக்கப்பட்டுள்ளார்.

உலக சமாதான மாநாடு:

# நாவலர், ராசாராம், பி. எச். பாண்டியன் ரஷியா பயணம்

சென்னை, ஜூன் 15. செக்கோஸ் லோவேகியா நாட்டில் நடைபெற இருக்கும் உலக சமாதான மாநாட்டில் பங்கேற்க சட்டப் பேரவைத் தலைவர் க. ராசாராமும், நிதி அமைச்சர் டாக்டர் நாவலரும். துணை சபாநாயகர் பி எச். பாண்டியனும் செல்கிறார்கள்.

ரஷ்யாவை அடுத்துள்ள செக்கோஸ்லோவேகியா நாட்டில் உலக சமாதான மாநாடும், அணுகுண்டு ஒழிப்பு மாநாடும் நடைபெற இருக்கிறது.

இந்த மாநாட்டில் எல்லா நாடுகளையும் சேர்ந்த ஆயிரம் பிரதிநிதிகள் கலந்து கொள்கின்றனர்.

தமிழ்நாட்டில் இருந்து இந்த மாநாட்டுக்கு 19 பேர் செல்கிறார்கள்.

சட்டப் பேரவைத் தலைவர் க. ராசாராம் நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர். துணை சபாநாயகர் பி.எச். பாண்டியன் மற்றும் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் செல்கின்றனர்.

## இன்றிரவு பயணம

சபாநாயகர் ராசாராம் துணை சபாநாயகர் பி. எச். பாண்டியன் மற்றும் எம். பி. க்கள் மற்றும் எம். எல். ஏ க்கள் இன்று இரவு 7·40 மணிக்கு விமானம் மூலம் புறப்பட்டு டெல்லி செல்கின்றனர்.

நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் அவரது துணைவியார் விசாலாட்சி அம்மையாருடன் நாளை இரவு விமானம் மூலம் டெல்லி செல்கிறார்.

இவர்கள் அனைவரும் 17-ந் தேதி அதிகாலை 4 மணிக்கு டெல்லியில் இருந்து விமானம் மூலம் புறப்பட்டு செக்கோஸ்லோவேகியா தலைநகர் "பராக்" நகர் செல்கின்றனர்.

சமாதான மாநாட்டில் கலந்து கொண்டு விட்டு ஜூலை முதல் தேதி ரஷ்யா செல்கிறார்கள்.

ஜூலை முதல் தேதி முதல் 8-ம் தேதி வரை ரஷ்யாவில் லெனின் கிரேட், மாஸ்கோ, தாஷ்கண்ட் முதலிய நகரங்களில் சுற்றுப் பயணம் செய்கிறார்கள்.

இக்குழுவில் ஏ. ஜி. சுப்பாராமன் எம பி, ஏ. என் வேலு எம் பி, கே பி ராமலிங்கம எம் எல் ஏ, ஜெகதரட்சகன் எம் எல் ஏ உ. சுப்பிரமணியம் எம். எல். ஏ. து. புருஷோத்தமன் எம். எல். ஏ., க சுப்பு முன்னாள் எம. எல். ஏ., எஸ். முத்துசாமி எம், எல். சி. ஆகியோர் செல்கின்றனர்.

கல்கத்தா மின் நிலையத்தில் தீ:

## வானொலி ஒலிபரப்பு நின்றது

கல்கத்தா, ஜூன் 15—கல்கத்தா அருகில் ஜோகா என்ற இடத்தில் உள்ள மின் நிலையத்தில் இன்று (15-ந் தேதி காலை தீ விபத்து ஏற்) பட்டது.

இதனால் மின்சப்ளையில் தடங்கல் ஏற்பட்டதால் கல்கத்தா வானொலியில் ஒலிபரப்பு நடைபெறவில்லை

இதற்கு மாற்றாக கல்கத்தா விவித பாரதி மற்றும் யுவவாணி வானொலி ஒலிபரப்புகளில் பாதிக்கப்பட்ட வானொலி நிலைய ஒலிபரப்புகளை செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras—600 029.

Editor: S. PARASURAMAN



✲✲ ராதா
படம்: முத்து எங்கள் சொத்து



✲✲ மாயா



✲✲ ராஜீவ் - பிருந்தா
படம்: பிரியமுடன் பிரபு

# மொட்டை மாடியில் ரெட்டை ஜோடி

## அடுத்த மாதம் புதிய சங்கமம்

ராதாகிருஷ்ணன் கம்பைன்ஸ் சார்பில் எம். கே. ராதா தயாரித்து வரும் புதிய சங்கமம் வண்ணப் படத்தின் படப்பிடிப்பு வேலைகள் முடிவடைந்து விட்டன. அடுத்த மாத வெளியீடாக வரும் இப் படத்தில் பிரபு, சந்திரசேகர், சுகாசினி, ஒய். ஜி. மகேந்திரன் மனோரமா, பேபி சாந்தி, சாருஹாசன், ஆகியோருடன் ஏ. எல். நாராயணனும் நடித்துள்ளார்.

ராமகிருஷ்ண ராஜா கதை எழுதி இசையமைக்க வசனங்களை ஏ. எல். நாராயணன் எழுதியுள்ளார். சாருஹாசன் இயக்கியுள்ள இப்படம் அடுத்த மாதம் வருகிறது.

✲✲

## ஜூலையில் 'டௌரி கல்யாணம்'

சாருசித்ரா பிலிம்ஸ் தயாரித்துவரும் 'டௌரி கல்யாணம்' வண்ணப் படத்தின் படப்பிடிப்பு முடிவடைந்தது. ஜூலை மாதம் முதல் வாரத்தில் வெளிவர இருக்கும் இப் படத்தில் விசு, ஸ்ரீவித்யா, விஜய்காந்த், எம். என். நம்பியார், கிஷ்மு, எஸ். வி. சேகர், விஜி, எம். ஆர். ராஜாமணி, புஷ்பலதா, பிந்துகோஷ், குண்டு கல்யாணம், சந்துரு, மனோரமா மற்றும் பலர் நடித்துள்ளனர்.

எம். எஸ். விஸ்வநாதன் இசையமைத்துள்ள இப் படத்திற்கு என். பாலகிருஷ்ணன் ஒளிப்பதிவை கவனிக்க, கதை வசனம் எழுதி விசு இயக்கியுள்ளார்.

✲✲

## மன்மத ராஜாக்கள்

'மன்மத ராஜாக்கள்'' படம் வாலியின் பாடல் பதிவுடன் விஜயா கார்டனில் துவங்கியது.

''காடு வெளைஞ்சது
மாடு நுழைஞ்சது
நீ — வயசுக கன்னி
புதுவாய்க்கா தண்ணி''

என்ற இப்பாடலை சங்கர் கணேஷ் இசையில் மலேசியா வாசுதேவன் பாடினார்.

சுரேஷ், நளினி, கராத்தே மணி, அனுராதா, எஸ். எஸ். சந்திரன், கல்லாப் பெட்டி சிங்காரம், சில்க் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கே. ஜெயராம் தயாரிக்கும் இதன் கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷனை இராம. நாராயணன் கவனித்து வருகிறார்.

தேவர் பிலிம்ஸ் 'சஷ்டி விரதம்'' படத்திற்காக வாலி எழுதிய 'அம்மாடி மொட்டை மாடி ஆத்தாடி ரெட்டை ஜோடி'' என்ற பாடலை இளம் பாடகர்கள் சிவசிதம்பரம், டி. எம். எஸ். செல்வகுமார், சைலஜா, சசிரேகா ஆகியோர் சங்கர் கணேஷ் இசையமைப்பில் பாட ஒலிப்பதிவானது.

இப்பாடல் காட்சியில் ஒய். ஜி. மகேந்திரனும், எஸ். வி. சேகரும் வயதானவர்கள் போல் வேடம் போட்டுக் கொண்டு பூர்ணிமா ஜெயராம் வீட்டில் உள்ள பூர்ணிமா ஜெயராமின் தங்கைகள் துளசி, நித்யா இருவரையும் மாடிக்கு அழைத்துச் சென்று திருட்டுக்காதல் புரியும் காட்சியாக படமாக்கப்பட்டது இப்பாடலுக்கான நடனத்தை புலியூர் சரோஜா அமைத்தார்.

வி. ராமமூர்த்தி ஒளிப்பதிவு செய்தார். இப் படத்தின் கதை வசனத்தை தூயவன் எழுத பாடல்களை வாலி எழுதுகிறார். சங்கர் கணேஷ் இசையமைக்கிறார்.

ஆர். தியாகராஜன் டைரக்ட் செய்யு இப் படத்தை சி. தண்டாயுதபாணி தயாரிக்கிறார்.



✲✲ விஜயசாந்தி
படம்:
நீருபூக்தநெருப்பு

# சுரேஷுக்கு பானு தந்த பளார் பளார்

ராஜா கீதா மீது காதல் கொள்கிறான். கீதாவோ இவனைசட்டை செய்வதில்லை. எனினும் ராஜா கீதாவை விடாமல் துரத்துகிறான். நூலகம் செல்லும் கீதாவைப் பின்தொடர்ந்து ராஜாவும் செல்கிறான். ராஜாவை கண்ட கீதா

வெறுப்புற்று வேகமாக நூலகத்தை விட்டு வெளியேறி காரில் செல்கிறாள்.

ராஜாவும் தனது மோட்டார் சைக்கிளில் பின் தொடருகிறான்.

சிக்னலுக்காக கீதாவின் கார் நிற்கிறது ராஜா வேகமாக சென்று கீதாவின் காரை ஒட்டி தனது மோட்டார் சைக்கிளை நிறுத்துகிறான். வெறுப்புற்ற கீதா காரிலிருந்து இறங்கி வந்து சுரேஷின் கன்னத்தில் பளார் பளார் என்று அறைகிறாள்.

இக்காட்சி பரணி சினி ஆர்ட்ஸின் ஏதோ மோகம் படத்திற்காக படமாக்கப்பட்டது.

ராஜாவாக சுரேஷும், கீதாவாக பானுப்பிரியாவும் நடித்தனர். சிலுக்கு தேங்காய் சீனிவாசன். மாலா மற்றும் பலர் நடிக்கும் இப்படத்திற்கு டி. கே. மணியன் கதை வசனம் எழுதி இயக்கி வருகிறார்.

## கன்னிராசி

டார்லிங் டார்லிங் டார்லிங் வெற்றிப்படத்தையடுத்து விக்ரந்த் கிரியேஷன்சார் உருவாக்க இருக்கும் படம் கன்னிராசி பிரபு கதாநாயகனாக நடிக்கும் இப்படத்திற்கு இளையராஜா இசையமைக்க, அசோக்குமார் ஒளிப்பதிவைக் கவனிக்கிறார். ஜி. எம். குமார், மனோரஞ்சன் திரைக்கதை அமைக்க, கதை வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை ஆர். பாண்டியராஜன் ஏற்றுள்ளார். தொடக்க விழா நாளை காலை பிரசாத் ஸ்டுடியோவில் நடைபெறுகிறது.

✲✲

## 'மதுரை சூரன்'

கே. வி. கிரியேஷன் சாரின் 'மதுரை சூரன்' வண்ணப்படத் துவக்க விழா கடந்த வெள்ளிக் கிழமையன்று பாடல் பதிவுடன் ஏவி. எம். மில் நடந்தது.

விஜய்காந்த் அனுராதா, வடிவுக்கரசி, வி. கே. ராமசாமி, மனோரமா, ஜெயமாலினி, காந்திமதி மற்றும் பலர் நடிக்கின்றனர்.

சங்கர் கணேஷ் இசையமைக்கவுள்ள இப்படத்திற்கான பாடல்களை கவிஞர் வாலியும், அருப்புக்கோட்டை தவசிமணியும் புனைகின்றனர். ரகு ஒளிப்பதிவைக் கவனிக்க கதை திரைக்கதை, வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை எம். ஆர். விஜய்சந்தர் ஏற்றுள்ளார்.

✲✲

## அண்ணாவின் கட்டளை

பி. வி. நாகமுத்து புரொடக்ஷன் சார் அண்ணாவின் கட்டளை எனும் புதுமையான கதையம்சம் கொண்ட படமொன்றைத் தயாரித்து வருகின்றனர். இப்படத்திற்காக பூவை செங்குட்டுவன், ஆலங்குடி சோமு எழுதிய இரு பாடல்கள் பதிவாயின.

பல புதுமுகங்களுடன் எம். என். ராஜம். லூஸ் மோகன் ஆகியோரும் நடித்து வருகின்றனர் நடிகர் காந்தன் இப்படத்தில் இரு வேடங்களில் நடிக்கிறார். மாணவ சமுதாயத்தை மையமாக வைத்துப் பின்னப்பட்டுள்ள இப்படத்தின் கதை வசனம் எழுதி இயக்கும் பொறுப்பை சி. ஆர். தேவராஜ் ஏற்று செய்து வருகிறார். அண்ணாவின் பிறந்ததினமான செப்டம்பர் 15ல் இப்படம் திரைக்கு வருகிறது.

# கலைவிருந்து



✲✲ மனோஜ் - சுபத்ரா
படம்: சிராமத்து கிளிகள்



✲✲ மோகன் - உமா
படம்: ருசி



✲✲ ரதிதேவி படம்: ரதி



✲✲ பிரேம் - பூர்ணிமா ஜெயராம்
படம்: என் ஆசை உன்னோடுதான்



✲✲ மகேஷ் - இளவசி
படம்: கொக்கரக்கோ